

உ

கணபதி துணை

திருச்சிற்றம்பலம்

ACC. NO. 26001.

# சைவசாஸ்திர பரிபாலனம்

| தொகுதி உ | விஷு வருஷ வைகாசிமீ 1941 மே | பகுதி கூ |
| --- | --- | --- |

பிடியத னுருவுமை கொளமிகு கரியது
வடிகொடு தனதடி வழிபடு மவரிடர்
கடிகண பதிவர வருளினன் மிகுகொடை
வடிவினர் பயில்வலி வலமுறை யிறையே.

## வேதமும் வேள்வியும்

வேதமாவது: அநாதிமுத்தபதியாகிய சிவபெருமான் அநாதிபெத்த பசுக்களாகிய ஆன்மாக்களின் பொருட்டு இகபர சாதனங்கட்கு ஏதுவாக அருளிச்செய்த சர்வப்பிரமாண சாத்திரமாம். காமிகாகமத்திலே இருக்கு யசுர் சாமம் அதர்வம் என்பவை சிவபெருமானது மற்றைய முகத்திலே பிறந்தன; காமிக முதலிய சிவஞானம் மேன்முகத்தில் உற்பவித்தன என்று கூறப்பட்டது.

சித்தியார்

"ஆரண மாகமங்க ளருளினு லுருவுகொண்டு
காரண னருளானுகிற் கதிப்பவ ரில்லையாகும்."

சுருதிசூக்திமாலை

வேதமாவது: மந்திரம், அருத்தவாதம், விதிவாக்கியம் என மூவகைப்பட்டுப் பிறவாக்கியங்களைப் பற்றாது தானே பிரமாணமாகி விமற்சராருக்கன்றிப் பிறர்க்கறியப்படாத மெய்ப்பொருளினை யுடைத்தாய், ஈசுரனையே அறிவிப்பதாம்.

வேதவாக்கிய முழுதும் பிரமாணமே. வேதத்தின் வேறாய நூல்கள் அதனோடு விரோதியாதவழி ஆக்கியோர் தாரதம்மியத்துக் கேற்பப் பிரமாணமாம். வேதம்போல் திவ்விய சிவாகமமும் பிரமாணமாம்.

சிவஞானபோதபாஷ்யம்

எல்லாவுயிர்கள்மாட்டும் பேரருளுடைய பரமசிவனுற் செய்யப்பட்டமை பற்றியே வேதங்கட்குப் பிரமாணமுண்மை கொள்ளப்படும்.

வேதமென்னும் சொல் அறிதற் கருவியென்று பொருள் படும். இவ்வேதம் இருக்கு முதலிய நான்காம். வேதத்திலே அறம், பொருள், இன்பம், வீடு என்னும் நான்கு புருஷார்த்தங்களும் கூறப்பட்டுள்ளன. வேதமானது கன்மகாண்டம், ஞானகாண்டம் என்னும் இரு பிரிவுடையது. மந்திரம், பிராமணம் என்னும் இரண்டும் கன்மகாண்டம். உபநிடதம் ஞான காண்டம். கருமகாண்டம் கருமானுட்டானக் கிரமங்களையும், ஞானகாண்டம் அத்தியான்மிக ஞானத்தை அறிதல் வாயிலாகச் சிவஞானத்தையும் சொல்லும். இக்காரணத்தால் கருமகாண்டம் அற்ப சுருதி என்றும் ஞானகாண்டம் பிரபல சுருதி என்றும் வழங்கப்படும்.

வேதத்திலே நான்கு புருஷார்த்தங்களும் கூறப்பட்டன என்பதும், அது வடமொழியிலேயே உள்ளதென்பதும், அறிஞர்களால் ஓதப்பட்டுவருகிறதென்பதும்,

"ஆரியமா யறம்பொருளோ டின்பம்வீ டெல்லா
மறைந்துயிர்கட் கறிவுசெய லளிப்பதறு லந்நூல்
சூரியரா புள்ளவர்க ளோத வோதிக்
கொண்டுவர லான்முன்னே குற்ற மின்றிச்
சீரியபே ரறிவுடையோன் செப்ப வேண்டும்."

என்னும் சிவஞானசித்தியார் பரபக்கச் செய்யுளானும்,

வேதத்தை விட்ட வறமில்லை வேதத்தின்
ஓதத் தகுமற மெல்லா முளதர்க்க
வாதத்தை விட்டு மதிஞர் வளமுற்ற
வேதத்தை யோதி வீடுபெற் றார்களே.

என்னும் திருமந்திரத்தானும் உணரப்படும்.

அறுபத்துமூன்று நாயன்மாருள் ஒருவராகிய உருத்திரபசுபதிநாயனர் மேற்கூறிய வேதங்கள் நான்கனுள் யசுர்வேதத்தின் மத்தியில் விளங்கும் ஸ்ரீருத்திரத்தைத் தாமரைத்தடாகத்திலே கழுத்தளவு ஜலத்தில் நின்று இரவும் பகலும் ஓதி வீடுபெற்ருர் என்று பெரியபுராணத்தில் கூறப்பட்டது.

நீடு மன்பினி லுருத்திர மோதிய நிலைபால்
ஆடு சேவடி யருகுற வணைந்தன ரவர்க்குப்
பாடு பெற்றசீ ருருத்திர பசுபதி யாராங்
கூடு நாமமு நிகழ்ந்தது குவலயம் போற்ற.

சந்தானசாரியர் நால்வருள் ஒருவராகிய ஸ்ரீமத் உமாபதி சிவாசாரிய சுவாமிகள் தாம் பௌஷ்கரத்துக்கு அருளிச்செய்த வியாக்கியானத்தில் இந்த வேதங்களை எடுத்தாண்டு பிரமாண மாகக் காட்டியருளினர். வடமொழிச் சிவஞானபோத கர்த்தா வாகிய சிவாக்கிரயோகிகள் அங்ஙனமே வேதப் பிராமாணியம் நிலையிட்டருளினர். சிவஞானயோகிகளும் சிவஞானபோத மாபாஷ்யத்தில் அங்ஙனமே வேதப் பிராமாணியமும் நிலை நிறுத்தியிருக்கின்றனர்.

இக் காலத்துச் சைவருட் சிலர் இருக்காதி சதுர்வேதங் களையும் அவைகளிற் பேசப்படும் யாகங்களையும் இகழ்கின்ருர்கள். வேதங்கள் தமிழிலேயே உள்ளவை; அவைகளைக் கடல் கொண்டு போய்விட்டது; இப்பொழுது சம்ஸ்கிருதபாஷையில் இருப்பது உண்மையான வேதங்கள் அல்ல என்கிருர்கள்.

வேதங்கள் கடல்கோளில் அமிழ்ந்தி அழிந்தொழிந்தன வாயின், அக்காலத்துக்கு நெடுநாட் பின்னர் அவதரித்த சமயா சாரியமூர்த்திகள், "வேதத்தி லுள்ளது நீறு" "மறையின் னிசையார்" 'தூயகா விரியி னன்னீர் கொண்டிருக் கோதியாட்டி' 'வேதமும் வேள்வியு மாயி னார்க்கு' 'மந்திரமு மறைப்பொருளு மாயினன் காண்' 'நான்மறையி னொலி தோன்றும்" என்றும்,

சேக்கிழார் 'வையகம் பொலிய மறைச்சிலம் பார்ப்ப' 'வேத நெறி தழைத்தோங்க' என்றும், உமாபதிசிவாசாரியர் 'பார்திகழ வருசாம வேத மல்க' 'பழைய வைதிக சைவம் பரக்கவே' என்றும் கூறியது எந்த வேதத்தையோ? தமிழில் இருந்த வேதமும்

கடலில் மூழ்கிவிட்டால், இப்பொழுதுள்ளதும் வேதமல்லவென்ருல் சபாநாயகருடைய திருவடியில் சிலம்பா யொலித்தது எது?

மேலும், உத்தரவேதம் என்று திருக்குறளுக்குப் பெயர் வந்தது பூர்வ வேதத்தை நோக்கியே யன்ருே. வில்லிபுத்தூரர் 'மறைநாலோ டைந்தென்று நிலைநிற்கவே...மாபாரதம் சொன்ன நாள்' எனக் கூறி, வடமொழிப் பாரதத்தை வடமொழி நான்கு வேதங்களோடு சேர்த்து ஐந்தாம் வேதமென நிலைநிற்க வியாசர் கூறினுரென்று விளக்குகிருர். உமாபதிசிவாசாரிய ஸ்வாமிகளும்,

'இருக்குமுதன் மறைநான்கி னின்றுமுதலாக விருவமொரு
தமிழ்வேத மைந்தாவ தொன்று—சருக்கிருத்தி'.

எனப் பெரியபுராணத்தை இருக்கு முதலிய வடமொழிவேத நான்கோடு சேர்த்து, ஐந்தாவது தமிழ்வேதமெனச் சேக்கிழார் புராணத்துக் கூறியருளியிருக்கின்ருர். இன்னும் திருவள்ளுவ மாலையில் நாமகளும் உக்கிரப்பெருவழுதி முதலிய மெய்ப்புலவர்களும் வடமொழிவேதம் உண்டென்று பல்லாற்ருனும் நிறுவியிருக்கின்ருர்கள்.

'நாடா முதனுன் மறைநான் முகனுவிற்
கூடா விடைப்பா ரதம் பகர்ந்தேன்.' —நாமகள்.

'நான்மறையின் மெய்ப்பொருளை முப்பொருளா நான்முகத்தோன்
ருன்மறைந்து வள்ளுவனுய்த் தந்துரைத்த
நூன்முறையை'. —உக்கிரப்பெருவழுதியார்.

ஆரியமுஞ் செந்தமிழு மாராய்ந் திதனினிது
சீரியதொன் ருென்றைச் செப்பரிதால்—ஆரியம்
வேத முடைத்து....' —வண்ணக்கஞ்சாத்தனுர்.

அருணந்திசிவாசாரியர்

'நான்மறை பயிலா நாட்டில் விரவுத
லொழிந்து தோன்றன் மிக்கபுண் ணியந்தா னுகும்'.

எனக் கூறுதலால் அவ் வேதம் என்றுமுள்ளதென்பது நன்கு பெறப்படும்.

'இக்கிரமத் தென்னு மிருக்கு.'

என்னும் சிவஞானபோத வெண்பாவின் பகுதியிற் கண்ட இருக்கு என்னும் சொல்லுக்கு வேதங்கள் என்று உரையாசிரியர்கள் பொருள் கண்டனர்.

சைமினிமுனிவர் தாம் சிவதூஷணபரிகாரமாக இயற்றிய தோத்திரம் முதன் மூன்று பாதமும் அவர் வாக்காகவும், நான் காம் பாதம் இப்போதுள்ள வேதமாகவும் நிலவி வேதபாத ஸ்தவம் என்று பெயர் பெற்றிருக்கின்றது.

கோயிற்புராணம்

சயமலி சாம வேதத் தலைவரி னொருவ னான
செயிமினி முனிவ னண்ணித் திருநடந் தொழுது வாழ்ந்து
வியன்மலர்ப் பாத மன்பால் வேதபா தத்த வத்தா
னயமிகப் பரவி யின்ப நண்ணினு னெண்ண மார.

[செயிமினி—சைமினி; தவம்—தோத்திரம்.]

"தொடுக்குங் கடவுட் பழம்பாடற் றொடையின் பயனே நறைபழுத்த
துறைத்தீந் தமிழி னொழுகுநறுஞ் சுவையே."

'ஏடகத் தெழுதாத வேதச் சிரத்திருக்கு மிவன்'

என மீனாக்ஷியம்மை பிள்ளைத்தமிழிலும்,

'எழுதாக்கிளவி நின்மொழி யெனப் படுதலின்.'

எனத் திருவாரூர் நான்மணிமாலையிலும், குமரகுருபரசுவாமி கள் கூறியருளினர்.

'கற்பகங் கைசந் தங்கா லெண்கண்
தெற்ற னிருத்தஞ் செவிசிக் கைமூக்
குற்ற வியாக ரணமுகம் பெற்றுச்
சார்பிற் றோன்று வாரண வேதக்
காதியந் தமிலை யதுவே நெறியினும்
வேதிய னுரையின் விதியுங் கேட்டு.'

என்று பௌத்தநூலாகிய மணிமேகலையென்னும் காவியத்தி னும் கூறப்பட்டது.

இதுகாறுங் கூறியவாற்றானே வேதசிவாகமங்கள் சிவன் வாக்கே யென்பதும், அவைகளே ஆதியிலுண்டான முதனூல்கள் என்பதும், நான்மறை தமிழில் இருந்தது என்பது கற்பனையே என்பதும், சமயாசாரியர் சந்தானாசாரியர் முதலிய எவரும் தமிழில் நான்மறை இருந்ததெனக் கூறவில்லை யென்பதும் பசுமரத்தாணிபோற் பதித்து நாட்டப்பட்டன.

இனி, வேள்வியைப்பற்றி ஆராய்வோம். வேதத்திலே வேள்வி கூறப்பட்டிருத்தலின், அது கொலை விதிக்கும் நூல் என்றும், ஆரியரின் கலப்பின் பின்னரே தெய்வங்கட்குப் பலியிடும் வழக்கம் புராணங்களிலும் கலக்கப்பட்டன என்றும் கூறிச் சழக்குநெறிப்பட்டார் சிலர். இங்ஙனம் வேதத்திற் கூறப்பட்ட வேள்வியை நிந்தை செய்து,

*'வேத வேள்வியை நிந்தை செய்துழல்'*

என்னுந் திராவிடசுருதிக்கு இலக்காய் நிற்கின்றனர்.

திருவள்ளுவநாயனரே வேள்வி சிறந்ததென்பதை

*அவிசொரிந் தாயிரம் வேட்டலி னொன்ற*
*னுயிர்செகுத் துண்ணாமை நன்று.*

என்பதனல் வெளியாக்கினர். வேள்வி சிறப்பற்றதாயின், 'அவிசொரிந் தாயிரம் வேட்டலின்' என்றதனல் உயிர்செகுத் துண்ணாமைக்கு வந்த சிறப்பு யாது? மேலும், அவரே 'அவி யுணவி னான்றோர்' என்றுரைத்தார். 'அவியாகிய உணவு தேவர்க்கு வேள்வித் தீயிற் கொடுப்பன' என்றார் பரிமேலழகி யாரும்.

சோமாசிமாறநாயனர், சிவபெருமானே அதிபதியாகக் கொண்டு, எழுலகும் சந்தோஷிக்கும்படி யாகஞ் செய்தனர் என்று பெரியபுராணம் கூறுகின்றது.

*"யாழின் மொழியா ளிடப்பாகரைப் போற்றும் யாகம்*
*ஊழின் முறைமை வழுவா துலகங்க ளான*
*எழு முவப்பப் புரிந்தின்புறச் செய்த பேற்றால்*
*வாழுந் திருமிசர் மலர்க்கழல் வாழ்த்த லென்பாம்."*

என்று சொல்லப்பட்டிருக்கிறது.

திருவாவடுதுறையிலே பரமசிவனல் அருளப்பட்ட பொற்கிழி பெற்று, தந்தையார் கையிலே கொடுத்து, 'பரமசிவனையே தலைவராக நினைந்து, வேதவிதிப்படி செய்யப்படும் யாகத்தை, நீரும் சீகாழியிலே இருக்கின்ற மற்றைப் பிராமணர்கள் சமஸ்தரும் செய்ய இக் கிழி குறையாது மிகும்' என்று சொல்லி, விடைகொடுத்து, அவரைச் சீகாழிக்கு அனுப்பியருளினர் திருஞானசம்பந்தப்பெருமான் என்றும் அறிகின்றோம்.

ஆதி மாமறை விதியினு லாறுசூழ் வேணி
நாத னுரைமுன் னுகவே புரியுநல் வேள்வி
தீது நீங்கநீர் செய்யவுந் திருக்கழு மலத்தி
வேத வேதிய ரனைவருஞ் செய்யவு மிகுமால்.

சுப்பிரமணியக்கடவுளுடைய ஒரு திருமுகம் "அந்தணர் வேள்வி யோர்க்கும்" என்று நக்கீரர் அருளியிருக்கின்றார்.

பிரமதேவர் கங்கைக்கும் யமுனைக்கும் மத்தியிலுள்ள அந்தர்வேதியில் வேதமுறைப்படி ஓர் யாகம் செய்ய ஆரம்பித்தார். அந்த யாகத்துக்குத் தில்லைவாழந்தணர்கள் வராதிருப்பதை யோர்ந்த பிரமன் நேரில் வந்து பிரார்த்தித்து, வியாக்கிர பாதருடைய உத்தரவின்படி அழைத்துச் சென்றனர். ஐந்தாம் மனுவந்தரத்திலே சிங்கவருமர் தில்லைக்கு வந்து திருநடங் தரிசித்து, இறைவனுக்கு ஆலயமெழுப்பி, திருவிழா முதலியன நடாத்த ஆரம்பித்தபோது அந்தர்வேதிக்கு யாகங் காணச் சென்ற அந்தணர்கள் மூவாயிரர்களையும் தருவித்துத் திருமாளிகை அமைத்து இருத்தினர். இது கோயிற்புராணத்துக் கண்டது. இத் தில்லைவாழந்தணர்களை

திருஞானசம்பந்தமூர்த்திநாயனர்

'பரப்பைப் படுத்தெங்கும் பசுவேட் டெரியோம்பும்...சிறப்பர்'

என்று பாராட்டியிருக்கின்றார்.

தேவர்கட்குச் செலுத்தப்படும் அவியை ஏற்பவரும், அக்கினிக்குத் தலைவரும், யாகரட்சகரும், யாகாதிபதியும் சிவபெருமானேயாம். சிவபெருமானை யாகாதிபதி என்றும் 'யக்ஞத்துக்கு ராசாவாக உங்களைக் காக்கும் பொருட்டு உருத்திரரை நாடுக' என்றும், இரகசியமாகிய இருபத்தொரு யாகங்களும் உம்மிடத்திலே தான் வைக்கப்பட்டன என்று இருக்குவேதங் கூறுகின்றது. யாகங்களிற் செய்யப்படும் சோமவிளியும் பசுநியேசனமும் சிவபெருமான் பொருட்டுச் செய்யற்பாலன என்றும், பால் தயிர் முதலிய அவிசும் அவருடையன என்றும் வேதங் கூறும்.

நக்கீரனுரே திருமுருகாற்றுப்படையுள் "மூன்றுவகை குறித்த முத்தீச் செல்வத் திருபிறப்பாளர்" என்றும், பெருந்தேவபாணியில், 'வேதமு நீயே வேள்வியு நீயே' என்றும்

கூறியிருக்கின்றார். மாணிக்கவாசகர் 'வேதமும் வேள்வியு மாயி னார்க்கு' என்று அருளுகின்றார்.

திருநாவுக்கரசுநாயனார்

'பறப்பையும் பசுவும் படுத்தும் பல
திறத்தவு முடையோர் திகழும் பதி' எனவும்,

சுந்தரமூர்த்திநாயனார்

'தூய நெய்யால் வட்டக் குண்டத்
தெரிவளர்த் தோம்பி மறை பயில்வார்' எனவும்,

திருவாலியமுதனார்

நூவாமுத் தியஞ்சு வேள்வியா றங்கம் நான்மறையோர்
ஆவே படுப்பா ரந்தணாள ராகுதிவேட் டுயர்வார்
மூவாயிரர் தங்களொடு முன்னரங் கேறிநின்ற கோவே. எனவும்,
திருவாய்மலர்ந்திருப்பதும் காண்க.

பாண்டியருள்ளும் ஒரு வேள்வியல்ல; பல்வேள்வி செய் தாருமுளர். புறநானூற்றிலே 'புரையினற் பனுவ னால்வேதத் தருஞ்சீர்த்திப் பெருங்கண்ணுறை நெய்மலி யாவுதி பொங்கப் பன்மாண் வீயாச்சிறப்பின் வேள்வி முற்றி யூபநட்ட வியன் களம் பலகொல்' எனப் பாடப்பட்டுள்ளது. இதனால் யூபஸ்தம் பங்களை நட்டு நான்கு வேதமுறைப்படி பல யாகங்களைச் செய்து முடித்தமையால் பல்யாகசாலை முதுகுடுமியென்று புகழப்பட் டிருக்கின்றனர் தமிழ்வேந்தன். யூபஸ்தம்பம் நட்டது யாகப் பசுக்களைக் கட்டுதற்கே யன்றோ?

உமையைத் தனக்கு மகளாகப் பெற்ற மலயத்துவசன் தொண்ணூற்றொன்பது அசுவமேத யாகங்கள் செய்தானென்று திருவிளையாடற்புராணத்திற் கூறப்பட்டிருக்கிறது. மனுநீதி கண்டசோழர் பல யாகங்களைச் செய்தாரென்று பெரியபுராணம் கூறும்.

இதனால் பழைய தமிழ்அரசர்கள் வேதமுறைப்படி யூபஸ்தம்பங்கள் நட்டுப் பல யாகங்கள் செய்தாரென்று விளங்கு கிறது. நமது தமிழ்நாட்டு அரசர்கள் 'மேதபதிம்' என்பது முதலிய வேதவாக்கியங்களில் யாகத்துக்குத் தலைவர் சிவபெரு மானே என்று கூறியிருப்பதையும், இவ் வாக்கியங்கட்கு முரா ணாகச் சிவபெருமானை வரிக்காது யாகஞ் செய்யப் புக்க தக்கன் பட்ட பாட்டையும் உணர்ந்து, தமது சிவபக்திக்கேற்ப யாகங்கள்

பலவற்றை மழைவழஞ் சுரந்து நாடு செழித்துக் குடிகள் இன்புறு தற்கும், பிறபயன்களைக் குறித்தும், தெய்வங்கட்குச் சிறப்பொடு பூசனை செல்லுதற் பொருட்டும் செய்தனர்.

வேள்விக்கொலை தீங்கு பயவாது நன்மையே பயக்கும். வேள்வியிற் கொலையுண்ட உயிர் மேலுலகத்துச் சென்று இன்பந் துய்க்கும் ஆதலானும், எழுப்பப்படுமாதலானுமாம்.

கந்தபுராணம்

புன்மையாம் பசுத் தடிந்து புரையில் வேள்வி யாற்றியே
தொன்மைபோ லெழுப்பு மாறு சுருதி சொற்ற வாறுபோல்
மன்மதன் றனைப் படுத்து மாதை வேட்டு மற்றதன்
பின்முறைக்க ணல்க வெம்பி ரானி னைந்த னன்கொலாம்.

யாகாதிபதி சிவனேயாதலால், அவர்க்கு அவிக்கு நேர்ந்த உயிர் இந்த அபுத்திபூர்வ சிவபுண்ணியத்தால், மறுமையிலே புத்திபூர்வ சிவபுண்ணியஞ் செய்து சிவஞானமுற்று முத்தி எய்தும்.

இக்காலத்து மீண்டு யாகப்பசுவை எழுப்பும் சத்தியில்லாதவர் யாகப்பசுவைக் கொன்று யாகஞ் செய்தலாகாது. அது அப்பயதீக்ஷிதசுவாமிகள் தமது காலத்து யாகமொன்றியற்றி, ஈற்றில் யாகப்பசுவை எழுப்ப, அது எழுந்திலது. அவ்வமையத்துத் தீக்ஷிதர் வேதத்தை நோக்கி, 'சுருதியே! உன்னை நம்பி இப் பசுவைப் படுத்தேன். எழாதாயின் எனது உயிரைப் படுப்பேன். இது நிச்சயம்' என்று கூறும் உறுதிமொழியை வேதபுருஷன் கேட்டு வெளிப்பட்டு, 'நின் வாய்மைப்பத்தியின் பொருட்டு இப் பசு எழுந்துவிடும். இனி, இக் கொடுங் கலியில் பசுப்படுத்து யாகஞ் செய்யற்க; செய்யின் எழாது' என்று சொல்லி மறைந்தனன் என்னுஞ் சரித்திரத்தின் வைத்து உணரப்படும்.

இதனால் வேள்வியிற் கொலை அவ்வுயிர்க்கு நன்மை பயத்தலால் கொலையன்றென்பதும், வேதம் ஏனையிடத்துச் செய்யும் கொலையை விலக்கும் என்பதும், இதற்கு மாறாகக் கொலை செய்வோர் செயலை வேதத்திலேற்றிக் குறைகூறல் அறிவின்மை என்பதும் அறிந்துகொள்க.

---

# சுந்தரமூர்த்திசுவாமிகள் தியானம்

[மு. ஞானப்பிரகாசம் B. A., B. Sc., (Lond) எழுதியது.]

சுந்தரமூர்த்திசுவாமிகள் திருநாவலூரிலே, ஆதிசைவ அந்தணர்குலத்திலே பிறந்து நரசிங்கமுனையரையரால் வளர்க்கப்பட்டுத் திருவெண்ணெய்நல்லூரிலே தமது மணப்பந்தரில் சிவபெருமானுடன் வல்வழக்குப் பேசி, வன்றொண்டர் எனப் பேர்பெற்று, திருவாரூரிலே சிவபிரானுக்குத் தோழனாகி, அந்தத் தோழரே உடனாய் நின்று துணைபுரிய, சிவனடியார் முன்னிலையில் பரவைநாயகியாரை மணம் புரிந்து, திருவொற்றியூரிலே சங்கிலிநாயகியாரையும் அவ்வாறே அந்தத் தோழரே உள்ளும் புறமுமாய் நின்று உபகரிக்க மணம் புரிந்து, திருத்தொண்டத்தொகை பாடி, பற்பல அற்புதங்கள் இயற்றி, சேரமான்பெருமாளோடு திருக்கயிலை சென்ற எம்பெருமான் ஆவர்.

எம் பரமாசாரியருள் இல்லற நெறிநின்று ஒழுகிய பெரியார் இவர் ஒருவருமேயாவர். இல்லற ஒழுக்கத்தின் மேல் எல்லையில் நின்று "இல்வாழ்வான் என்பான் இயல்புடைய மூவர்க்கும் அவர் நல்லாற்றில் துணையாய் நின்றால் மாத்திரம் போதாது சிறப்புடைய சிவனடியார்க்கும் அவர் அருளாற்றில் அருந்துணையாய் நிற்கும் அருளாளனாதல்வேண்டும்" என்று எம்மனோர்க்கு வழிகாட்டிய முதற்பெரியபெருமான் எங்கள் சுந்தரமூர்த்திசுவாமிகளேயாகும். பந்தமும், வீடும் தருவது பரமன்கழலெனக் காண்பார் மெய்ஞ்ஞானிகள். அவர்கள் அஞ்சுவது யாதொன்றுமில்லை; அவர்களுக்கு அஞ்ச வருவதுமில்லை. எதிர்ப்படுவனவற்றையெல்லாம் "எம்பிரான் அருள் இவ்வழிச் சென்றதே" என்று ஆனந்தமாய் ஏற்று அநுபவித்துக் கழிப்பர். இவ்வுண்மையை அறியாதார் சுவாமிகளை எம்மனோருள் ஒருவர்போல் நினைத்துப் பிழைபடுவர். 'நாங்கள் செய்த பெரும் பாக்கியமே, சுந்தரமூர்த்திசுவாமிகளின் மனத்தைக் கமலினி, அநிந்திதையாற் செலுத்தி, இவ்வுலகிற்கு அவர் தம்மை அழைத்தது' என்கிறது பெரியபுராணம். ஆகவே, நாமெல்லாம் வாழ்வடைய இவ்வுலகிற்கு கமலினியையும் அநிந்திதையையும் தம்முடன் அழைத்துவந்து, எங்கள்

முன்னிலையில் சுவாமிகள் ஒழுகிய ஒழுக்கம் ஓர் தனிச்சிறப்பு வாய்ந்ததா யிருக்கவேண்டுமல்லவா?

பாருங்கள்! திருவாரூரிலே பரவையார் மாளிகையில் சிவனடியார்க்கென, பொற்குவியலும் எம்மருங்கும் குவிந்திருக்கும். பொற்காலமளிகள் அடியார் அமர்வதற்கும், அறிதுயில் கொள்வதற்கும் மாளிகை யெங்கணும் பரம்பியிருக்கும். மணிவிளக்குகளும், பொற்குடங்களும் அடியார் வரவேற்பின் பொருட்டு ஆங்காங்கு அமைந்திருக்கும். வீட்டின் தலைவியாய், அபலறியாத மனத்தினளாய், கற்பிற்கொரு தனியரசியாய், அனைவர்க்கும் அன்னையாய எம்பெருமாட்டி பரவைநாயகியார், தம் கொழுநர்க்கும் சிவனடியார்க்கும் நாடோறும் நிறை பூசனைகள் புரிந்துவருவதும், வெவ்வேறுவிதத்துக்கறியும்போனகமும் சமைத்து அவர்களுக்கு ஊட்டுவதும், பனிநீர் விரவு சந்தனம் எடுத்து அவர்களை மகிழ்விப்பதுமே தம் பெருந் தொண்டாக அமர்ந்திருப்பார். வீட்டின் தலைவரும் அனைவர்க்கும் தந்தையுமாய எம்பெருமான் சுந்தரமூர்த்திசுவாமிகள் அடியாரின் பொருட்டுச் சிவபிரானிடத்துப் போய்ப் பொன்னையும் நெல்லையும் முறைக்குமுறை பெறுவதும், அவற்றை வீட்டிற் குவித்துச் சிவனடியார்க்குக் கொடுத்து மகிழ்வதுமாய அருள்ஞான விளையாட்டில் அமர்ந்திருப்பார்.

சுவாமிகள், தாம் அடியார்பக்தி செய்து பெற்ற இன்பத்தை உலகத்திற்கும் ஊட்டவேண்டுமென்று கருதிய பெருந்தகையாளராவர். அதனாற்றான் அவர் 'திருத்தொண்டத்தொகை' என்ற பொக்கிஷத்தை எங்களுக்கு அளித்துள்ளார். அந்தத் தேவாரப்பதிகத்தையே எங்கள் சைவத்தின் மூலபண்டாரம் என்று நாங்கள் கொள்ளுதல்வேண்டும். எங்கள் சிவகதைகளும் சிவனடியார்கதைகளும், எங்கள் தொண்டர்களும் பக்தர்களும், எங்கள் யோகிகளும் ஞானிகளும், எங்கள் குரு லிங்க சங்கம வழிபாட்டுவகைகளும் அவற்றின் பெருமைகளும்; எங்கள் சிவபக்தியின் பலதிறப்பட்ட தன்மைகளும் அவற்றின் தனிப்பட்ட சிறப்புக்களும், எங்கள் சைவசாஸ்திர உண்மைகளும் அவற்றின் இலக்கியங்களும் ஆகிய இவற்றிற்கெல்லாம் மூலமாகிய நிலைக்களன் "திருத்தொண்டத்தொகை"

என்றால், அதனை மூலபண்டார மென்னாது வேறென்னென்று கூறலாம். ஆகவே, அடியார்பக்தி என்ற ஒரு தனிப்பட்ட அத்தியாயத்தை முதன்முதலாக சைவத்தமிழ்வாழ்க்கைக்கு ஒழுங்குபடுத்தி ஏற்படுத்திய பெருமை எங்கள் சுந்தரமூர்த்தி சுவாமிகளையே சார்ந்ததாகும்.

சுந்தரமூர்த்திசுவாமிகள் சிவபிரானுக்குத் தோழராவர். ஆனால், அவர்களிடத்தில் காணப்பட்ட தோழமை உலகியலில் காணப்படும் தோழமை போன்றதன்று. உலகியலில் தோழர்கள் ஒருவர்க்கொருவர் தோழராய் நின்று பரஸ்பரம் உதவி புரிவர். ஆனால், இவ்விடத்தில் சிவபிரான் சுவாமிகளுக்குத் தோழனாக நின்று அருள்புரிவர். சுவாமிகள் சிவபிரானுருக்கு எவ்வாற்றானும் உதவிபுரிய வல்லவரல்லர். ஆகவின், சுவாமிகளுடைய இறைஅடிமை உணர்ச்சி தன்முறையில் எவ்வளவுக்கெவ்வளவு முறுகுகின்றதோ, அவ்வளவுக்கவ்வளவு சிவபிரானர் அருள்வெள்ளப் பிரவாகமும், தோழர் என்ற முறையில் நின்று சுவாமிகள்மீது கொழிக்கும். இனி, உலகியலில் தோழர்கள் தமக்கிடையில் கலாம் விளைப்பதையும், கேலி செய்து நகையாடுவதையும், ஒருவர்க்கு மற்றவர் விவாகம் பேசி முடித்துவைப்பதையும், ஒருவர் குடும்பசங்கடங்களை மற்றவர் தீர்த்துவைப்பதையும், ஒருவர் மற்றவர்க்கு மூன்றாம் பேர்வழி ஒருவரை அறிமுகப்படுத்துவதையும், இவைபோன்ற மற்றும் செயல்களையும் காண்கின்றோமல்லவா? சுவாமிகளுக்கும் சிவபிரானர் இவ்வாறான செயல்களைப் புரிந்தே அருள்புரிந்தார். சிவபிரானர் எவ்வழி நின்று அருள்புரிந்தனரோ அந்த அருள் வழியே நின்று, அகப்பற்றுப் புறப்பற்றுக்களை நீக்கி, அருள் ஒழுக்கம் ஒழுகிய சுவாமிகள் வெறும் புறத்துறவின் அடையாளங்களைப் புனைந்தவரல்லர். அவைகளால் சுவாமிகள் போன்ற அருளாளர்க்குப் பயனொன்றுமில்லை என்பது வெளிப்படை. சிவபிரானர் திருவருளாணைப்படி, மணம் வந்த புத்தூரிலே அன்று தாங்கிய அழகிய மணவாளக்கோலத்தையே என்றும் தாங்கிச் சுவாமிகள் இந்நிலவுலகில் திகழ்ந்திருந்தார். அந்தக் கோலமே "சைவ மெய்த்திருவின் கோலம்" என்று கூறுகிறது பெரியபுராணம். அந்த அருட்கோலமே ஈண்டு தியான சுலோகத்திலும் தரப்படுகிறது.

மந்தஸ்மிதம் மணிவிபூஷிதவக்ஷஸம் தம்
யஜ்ஞோபவீததரவேதஸநாதபாஹும் ।
உஷ்ணீஷசோபிமணிகுண்டலகர்ணயுக்மம்
வந்தே த்ரிலிங்கசிவஸுந்தரமாச்ரிதாப்தம் ॥

மந்தஸ்மிதம் - புன்னகை தவழ்கின்ற முகத்தையுடையவரும். இஃது அன்மொழித்தொகையாய் நின்று இதனையுடைய பெருமானரைக் குறிக்கின்றதாய் ஈற்றில் நிற்கும் சிவஸுந்தரம் என்னும் சொல்லுக்கு அடைமொழியாய் வரும் ஒரு சொற்றொடராகும். அகத்தேயுள்ள உள்ளத்தின் நிறைவு சுவாமிகளின் முகத்தில் புன்னகையாய் வழிகின்றது. சுவாமிகள் உண்டுடுத்துப் பூண்டு உலகத்தவர்போல் விளையாடிய உலகை வென்று அடிப்படுத்திய அருள்வீரராகலின், அவர்க்கு வந்த வெற்றியும் பெருமிதமும் அளவிலடங்காதன என்பதைக் காட்டவே சதா புன்னகை தவழ்கின்ற முகத்தையுடையவரும் என்று கூறப்பட்டது.

மணிவிபூஷிதவக்ஷஸம் - மணியினுல் அலங்கரிக்கப்பட்ட மார்பையுடையவரும் சுவாமிகள் சிவஸ்தலங்கள்தோறும் யாத்திரைசெய்து வரும்பொழுது திருவாரூர்க்குச் சென்றதும், ஆங்கு வன்மீகநாதர் சுவாமிகளுடன் தோழமை பூண்டு பரவை நாயகியாரை மணம் செய்துவைத்ததும், சுவாமிகள் அன்று தொடங்கி என்றும் மணவாளக்கோலம் தாங்கியதும் புராண வாயிலாக அறியக்கிடப்பனவாகும். மற்றைய அடியாரால் அணியப்படாத ஒன்றைத் தாங்கிய மார்பினராய்ச் சுவாமிகள் திகழ்ந்தார் என்பதைக் காட்டவே மணிவிபூஷிதவக்ஷஸம் என்ருர்.

யஜ்ஞோபவீததர: - அருமறை வேள்விநூலைத் தாங்கியவரும். சுவாமிகள் ஆதிசைவ அந்தணர்குலத்திலே பிறந்தவராகலின், அந்த அரும பெரும் மரபுக்கேற்க அருமறை முந்நூல் விளங்கும் மார்பினராய்த் திகழ்ந்தார். சுந்தரமூர்த்தி சுவாமிகளோ ஞானத்தின் திருவுரு. நான்மறையின் தனித்துணை. வானத்தின் மிசையன்றி மண்ணில் வளர் மதிக்கொழுந்து. அப்பேர்ப்பட்ட சுவாமிகளுக்கு உபநயனம் செய்

தலும் முந்நூல் சாத்தலும் மிகை யென்பது வெளிப்படை. ஆயினும், மறை வாழவும், அந்தணர்தம் வாய்மையொழுக்கம் நிலவவும், உலகியலொழுக்கம் செழிக்கவும் பூணூல் விளங்கிய மார்பினராய்த் திகழ்ந்தார். இதனை, நினைவுகளைப் புதுமுறையிலே நினைக்கப் பழகி, சாதிசமய ஒழுங்குகளை மீறி, சனசமூகத்திலே புரட்சியைக் கிளப்பிவிடும் இக்காலத்து முற்போக்காளர் சிறிது அவதானிக்கக்கடவர்.

வேத்ரலஸநாதஹஸ்தம் - பிரம்பு விளங்குகின்ற திருக்கரங்களையுடையவரும். உலகியலிலும்; செல்வாக்குள்ள பெரிய மனிதர்க்கான அடையாளங்களுள் முக்கியமானது, கையிலே தாங்கப்படும் வெள்ளிப்பூணிட்ட பிரம்பாகும். அது அவர்களுக்கு வாய்த்த வெறும் பதவியைக் குறிப்பதாகும். ஆனல், சுவாமிகள் திருக்கரத்தில் தாங்கிய பொற்பூணிட்ட பிரம்போ, அவர் மாலயனுட்பட அனைவர்க்கும் மேலானவரென்றும், வேதங்களுட்பட அனைத்தையும் அடிப்படுத்திய பெருமானுரென்றும் குறிக்கும் அருள்ஞான அடையாளமாகும். பெரியபுராணமும் "கையினிற் புனைபொற் செண்டும்" என்று சுவாமிகளுடைய அருட்கோலத்தைப்பற்றிக் கூறுவதைக் காண்க.

உஷ்ணீஷசோபி - தலைப்பாகை விளங்குகிற சிரசையுடையவரும்,

மணிகுண்டலகணவிராஜத்கர்ணம் - இரண்டு காதுகளிலும் விளங்குகின்ற மணி அழுத்தப்பெற்ற குண்டலங்களையுடையவரும். சேக்கிழார்சுவாமிகளும் "காதிலிலங்கு தோடும்" என்று சுவாமிகள் தம் அருட்கோலத்தை விதந்து கூறுவதைப் பெரியபுராணத்தில் காண்க.

குஞ்சிதாங்க்ரிம் - உயர்த்திச் சிறிது முன்னுக வைக்கப்பட்ட திருவடியை உடையவரு். நடக்கும்பொழுது 'அடல் விடைபோல் நடந்து செல்வதும், நிற்கும்பொழுது ஒரு திருவடியை உயர்த்திச் சிறிது முன்னுக வைத்து உல்லாசமாய் நிற்பதும், சுவாமிகள் சிவபிரானுர்க்குத் தோழமை பூண்ட மிக நெருங்கிய அணுக்கர் என்பதைக் காட்டும் புறக்குறிகளாகும்.

ஸ்ரீஹம்ஸஸிவஸஹ்ஹ்ரம் - திரிபங்கநிலையையுடைய, சிவசம்பந்தமுற்ற சுந்தரமூர்த்திசுவாமிகளது. திருமேனியானது வளைந்து மூன்று பிரிவுகளாய்த் தோன்றும்படி நிற்றல் திரிபங்கநிலை எனப்படும். சுவாமிகள் தோழராகிய சிவபிரானார்க்குப் புறவணக்கம் செலுத்தும்பொழுது நிற்கும் நிலை திரிபங்கநிலை போலும்.

வமிந்ஹ - வந்த் என்ற அடியாகப் பிறந்த நிகழ்கால ஒருமைத் தன்மை வினைமுற்று. மனமொழிமெய்களால் துதிக்கின்றேன் என்பது.

பொழிப்புரை:—புன்னகை தவழ்கின்ற முகத்தையுடையவரும், மணியால் அலங்கரிக்கப்பட்ட மார்பினையுடையவரும், அருமறை வேள்விநூலைத் தாங்கியவரும், கையினிற் பொற்பிரப்பையுடையவரும், தலைப்பாகை விளங்கும் சிரசையுடையவரும், தோடிலங்குங் காதையுடையவரும், சிறிது முன்னுக உயர்த்திவைக்கப்பட்ட ஒரு திருவடியையுடையவரும், திரிபங்க நிலையினருமாகிய சுந்தரமூர்த்திசுவாமிகளை மனமொழிமெய்களால் துதிக்கின்றேன்.

பணையும் தடமும் புடைசூழ மொற்றி யூரிற் பாகத்தோர்
துணையுந் தாமும் பிரியாதார் தோழத் தம்பி ரானுரை
இணையுங் கொள்கைச் சங்கிலியா ரெழின்மென் பணைத்தோ ளெய்துவிக்க
வணையு மொருவர் சரணமே யரண மாக வடைந்தோமே.

(சேக்கிழார்)

சுபம்! சுபம்! சுபம்!

---

# கடவுள் உண்டா? இல்லையா? என்ற கேள்விக்கு நாம் கூறும் விடை

[உலகன்பட்டி சித்தாந்தசைவவில்ல மாணவர்
எம். வி. நாராயணன்செட்டியார்]

உலகத்திற்குக் கர்த்தாவாகிய கடவுள் ஒருவர் உண்டா? இல்லையா? என்னும் இக் கேள்விக்கு ஆத்திகர் பலர் உண்டு என்கிறார்கள். நாத்திகர் இல்லை என்கிறார்கள். ஆத்திகரும் நாத்திகருமல்லாத சந்தேகவாதிகள் உண்டு என்பாரை நோக்கி, "கடவுள் இருந்தால் காட்டுங்கள்" என்கிறார்கள். ஆத்திகர் பலர் மற்ற இருதிறத்தார்க்கும் கடவுளைக் காட்டவேண்டி மிகவும் பிரயாசைப்படுகிறார்கள். ஆனல், ஆத்தி

கர்களுள் சைவர்களாகிய நாம் அக் கேள்விக்கு உண்டு என்றேயாவது இல்லையென்றேயாவது சொல்வதில்லை. பின் என்செய்வேமென்றால், மௌனமா யிருந்துவிடுவோம். அல்லது, "உண்டு என்பவர்களுக்கு உண்டு; இல்லையென்பவர்களுக்கு இல்லை" என்று சொல்வோம். நாம் மௌனமாயிருப்பதே அவர்கள் கேட்கும் கேள்விக்கு முதலில் அளிக்கும் விடையாகும். அவ் விடையின் கருத்தை யறியாமலே அவர்கள் தாம் கேட்ட கேள்விக்குப் பதில் சொல்ல முடியாமல் சும்மா விருப்பதாக எண்ணிக்கொள்ளக்கூடும். நாம் "கடவுள் உண்டு என்பவர்க்கு உண்டு, இல்லையென்பவர்க்கு இல்லை"யென்று சொன்னால், அவர்கள் கைகொட்டி நகைத்து, "இது கோமுட்டி சாட்சி சொன்னதுபோலாம். ஏககாலத்தில் உள்ளதாகவும் இல்லதாகவும் இருக்கும் ஒரு பொருளை நாம் எங்கும் கண்டதில்லை. அவ்வாறான பொருள் ஒன்றிருக்கும் என்பது மலடி மக்களைப் பெற்றாள்; குருடன் கண்ணாரக் கண்டான்; செவிடன் காதாரக் கேட்டான்; முயலின் கொம்பு மூன்று முழ நீளமிருக்கும் என்பன போல் பொருள் இல்லாதனவாகிய வெறுஞ் சொற்களாம்" என்பார்கள். ஆதலால், நாம் அவர்களுக்களிக்கும் விடைகள் இரண்டனுள் முன்னே முதலில் அளிக்கும் மௌனவிடையின் கருத்தைச் சிறிதாராய்வாம்.

நாம் எதையும் மனம் வாக்குக் காயங்களாகிய திரிகரணங்களைக் கொண்டு அறிகின்றோம். திரிகரணங்கள் சடப்பொருள்கள். சடப் பொருள்களைக் கொண்டு சடப்பொருள்களை யறியக்கூடுமேயன்றி, சித்துப்பொருளாகிய கடவுளை யறிய முடியாது. திரிகரணங்களால் கடவுளை அறியக்கூடுமாயின் கடவுள் என்பது சடப்பொருள்களுள் ஒன்றாய்விடும். மேலும், கடவுள் என்னுஞ் சொல்லுக்குக் 'கடந்து நிற்றலை யுடையது' என்பது பொருள். எதைக் கடந்துநிற்றலையுடையதெனில் தத்துவங்களைக் கடந்துநிற்றலை யுடையதென்போம். எனவே, தத்துவாதீதமாய் இருக்கும் பொருள் எதுவோ அது கடவுள் என்பது பெறப்பட்டது. மனம் வாக்கு காயம் என்னும் மூன்றும் திரிகரணங் கள் எனப்படும் தத்துவங்களாம். ஆதலினால், மனத்தாலும் வாக்காலும் காயத்தாலும் அறியப்படாத பொருள் எதுவோ அது கடவுள் என்பது பெறப்பட்டது. அத்தகைய பொருளை நாத்திகர் காட்டச் சொல்வது அவர்கள் "மனம் வாக்குக் காயங்களால் அறியக்கூடாத பொருளை, நாங்கள் எங்கள் மனம் வாக்குக் காயங்களால் அறியுமாறு, நீங்கள் உங்கள் மனம் வாக்குக் காயங்களைக் கொண்டு காட்டுங்கள்" என்று கேட்பதுபோலாம். இக் கேள்வி மூடக்கேள்வியாகையால், அவ்வாறு கேட்கும் மூடர்களைத் தெருட்டுவது எவ்வாற்றானும் கூடாதென்பதை உன்னியே நாம் முதலில் அவர்களுடன் உரையாடாமல் மௌனமாய் இருப்பது.

உரையுணர்விறந்த ஒரு பெரும் பொருளே கடவுள் ஆதலால் அப் பொருளை உரையும் உணர்வும் அற்ற நிலையினரே அறிதற்பாலார். உரையுணர்வற்ற நிலையே மனமும் வாக்கும் இறந்தநிலையெனவும், பரமஞான நிலையெனவும், மோனநிலையெனவும் சொல்லப்படும். அந்நிலை கடவுளோடு உடனுயிருந்து இன்பம் நுகர்வதாகிய அநுபவமாத்திரமாயிருப்ப தன்றி, வாயினு லெடுத்துரைக்கப்படுவதன்று. இதுபற்றியே மேலோர்,

"கண்டவர் விண்டிலர் விண்டவர் கண்டிலர்" என்பர்.

இதுபற்றியே காரைக்காலம்மையார்,

"அன்றுந் திருவுருவங் காணாதே யாட்பட்டே
னின்றுந் திருவுருவங் காண்கிலே—னென்றுந்தா
னெவ்வுருவோ னும்பிரா னென்பார்கட் கென்னுரைக்கே
னெவ்வுருவோ நின்னுருவ மேது."

எனவும், திருமூலநாயனாரும்,

"உரையற்ற தொன்றை யுரைசெய்யு மூமர்காள்
கரையற்ற தொன்றைக் கரைகாண லாகுமோ
திரையற்ற நீர்போற் சிந்தை தெளிவார்க்குப்
புரையற் றிருந்தான் புரிசடை யோனே.

எனவும் அருளிப்போந்தார்கள்.

மேலும், ஒருவன் மரணாவஸ்தைப்படும்போது அவனுடைய சுற்றத் தவர்கள் அவனை நோக்கி, "அப்பா, நீ படும் வேதனையை நாங்களறியச் சொல்" என்று கேட்டால் அவன், "ஐயோ! நான் படும் வேதனையை உங்களுக்கு எவ்வாறு தெரிவிப்பேன்" என்று கூறுவான். இப்படியே ஸ்திரீபுருஷர்கள் ஒருவரையொருவர் மருவி அனுபவிக்குங் கலவியின் பத்தைப் பிறர்க்குச் சொல்ல இயல்வதில்லை. இச் சிற்றின்பமும் அனுபவமாத்திரமாயிருப்பது மாத்திரமன்றி, அதற்குரிய பருவம் வந்த பிறகே அனுபவத்திற்கு வருகிறது. இதனை 'கன்னிகையொருத்தி சிற் றின்பம் வேம்பெனினுங் கைக்கொள்வள் பக்குவத்தில், கணவனருள் பெறின் முன்னே சொன்னவாறென்னெனக் கருதி நகையாவள்' என்னுந் தாயுமான அடிகளார் திருவாக்கு உணர்த்தும். அதுபோல் பேரின்பமய மாயிருக்கும் கடவுளை மலபரிபாகம் பெற்ற ஞானிகளும் இரண்டறக்கூடி இன்பமார்ந்திருப்பரேயன்றிப் பிறர்க்கெடுத்துரையார். ஆதலால், நாமும் நாத்திகர் கேட்கும் அக் கேள்விக்கு விடை வாயினாற் சொல்லப்படுவ

தன்று என்பதைக் குறிப்பாய் உணர்த்தவேண்டி மௌனமாயிருந்து விடுவோம்.

இனி, 'கடவுள் உண்டு என்பவர்க்கு உண்டு; இல்லை என்பவர்க்கு இல்லை' என்று கூறுவதைப்பற்றிச் சிறிது ஆராய்வாம்.

ஒருவன் தன் குழந்தையின்மீது வைத்த (பற்று எனப்படும்) அன்பினால் அக் குழந்தையைக் காணும்போதும், அதன் சொற்களைக் கேட்கும்போதும், அதைத் தீண்டும்போதும் இன்பம் அடைகின்றான். அவ்வாறே மனைவி, மாடு, வீடு முதலியவற்றினிடத்தும் வைத்த அன்பினால் இன்பம் அடைகின்றான். இதனால் பிரபஞ்சத்தில் உயிர்களுக்கு உண்டாகும் காரணம் பிரபஞ்சப் பொருள்களிடத்தில் வைத்த அன்பே என்பதும், அன்பு எங்கு உண்டோ அங்கு இன்பம் உண்டு என்பதும் விளங்கும். சிறிய பொருளாகிய பிரபஞ்சத்தில் வைத்த அன்பினால் சிற்றின்பம் உண்டாவதுபோல் பெரிய பொருளாகிய கடவுளிடத்து வைத்த அன்பினால் பேரின்பம் தோன்றும் என்பது உண்மை. இதனை 'அன்பினில் விளைந்த வாரமுதே' என்னும் மணிவாசகப்பெருமான் திருவாசகத்தால் உணரலாம். இன்பம் கடவுளின் உருவமாதலாலும், அவ்வின்பம் அன்பினால் உண்டாவதனாலும், அன்பிலார்க்கு இன்பமும் இல்லையாகையாலும் கடவுளை விசுவசித்து அன்பு செய்வார்க்கு அவர் உளராகவும், அன்பு செய்யாதவர்க்கு இலராகவும் இருக்கிறார்.

அன்றியும், 'குழந்தையுந் தெய்வமுங் கொண்டாடுமிடத்தில்' என்னும் பழமொழியின்படி, குழந்தையானது தன்னை ஆசையோடு கண்ணே! கண்மணியே! செல்வமே! எனப் பல கூறிக் கையிலேந்தியும், மார்போடணைத்தும், முத்தமிட்டும், பாலூட்டியும், தாராட்டியும் வளர்ப்பவர்களிடம் தானும் ஆசையோடு சென்று அவர்கள் மடிமீதிருந்து விளையாடுவதுபோல், கடவுளும் தம்மை நேசித்து அபிஷேகித்தும், அலங்கரித்தும், அருச்சித்தும், தோத்திரங்கள் பாடியும், திருவிழாக் கொண்டாடியும் வணங்குவார்க்கு எளியராய் அவர் சிந்தையைக் கோயிலாகக் கொண்டு வெளிப்பட்டருளுவர். மற்றவர்களுக்கு அவ்வாறு வெளிப்பட்டருளுவதில்லை. இதுபற்றியே தமிழ்வேதமாகிய தேவாரமும்,

"எந்தை யீசன் எம்பெருமான் ஏறமர் கடவுளென் றேத்திச்
சிந்தை செய்பவர்க் கல்லால் சென்றுகை கூடுவ தன்றால்
கந்தமா மலருந்திக் கடும்புனல் நிவாமல்கு கரைமேல்
அந்தண்சோலை நெல்வாயில் அரத்துறை அடிகள் தம் அருளே."

எனவும்,

கடவுள் உண்டா இல்லையா? என்ற கேள்விக்கு நாம் கூறும் விடை

"வைத்த நிதியே மணியே யென்று வருந்தித்தஞ்
சித்த நைந்து சிவனே யென்பார் சிந்தையார்
கொத்தார் சந்துங் குரவும் வாரிக் கொணர்ந்துந்தி
முத்தா றுடைய முதல்வர் கோயில் முதுகுன்றே."

எனவும் முழங்குகின்றன.

உலகத்தில் கடவுள் உண்டென்று நம்பி அவரை வழிபடுவோருள்ளும் தம்முடைய அன்பெல்லாம் மனைவிமக்களிடத்திலும் செல்வம் முதலியவற்றிலுமே அழுந்தவைத்திருப்பவர்களுக்கும் கடவுள் இலராகவே இருக்கின்றார். இவ்வாறு சிற்றின்பப் பிரியராய்ப் பிரபஞ்ச வாழ்க்கையையே பெரிதாக மதித்துக் கடவுளையும் அவரால் உண்டாகும் பேரின்பத்தையும் இழப்பார்க்கு இரங்கியே நமது மணிவாசகப்பெருமான்,

'தினைத்தனை யுள்ளதோர் பூவினிற்றே னுண்ணாதே
நினைத்தொறுங் காண்டொறும் பேசுந்தோறு மெப்போதும்
அனைத்தெலும் புண்ணெக வானந்தத் தேன்சொரியும்
குனிப்புடை யானுக்கே சென்றூதாய் கோத்தும்பீ.'

என்றருளிச்செய்தனர்.

கடவுளை அவரருளையே கண்ணாகக்கொண்டு காணவேண்டுமேயன்றி, ஆணவமலத்தால் மயங்கிக் கிடக்கும் சுட்டுணர்வைக் கொண்டு காணமுடியாது. அருளைக் கண்ணாகக்கொண்டு காணும் ஞானிகளுக்குப் பேரொளியாகிய பரசிவம் தோன்றும்; பிரபஞ்சந் தோன்றாது. சுட்டியறியும் அறிவைக் கொண்டு காணும் ஏனையோர்க்கு அந்தகாரமாகிய பிரபஞ்சந் தோன்றும்; சிவம் தோன்றாது. இதனாலன்றோ நம் தாயுமான அடிகளார்,

"அருளா லெவையும்பா ரென்றான்—அத்தை
யறியாதே சுட்டியென் அறிவாலே பார்த்தேன்
இருளான பொருள்கண்ட தல்லால்—கண்ட
வென்னையுங் கண்டில னென்னேடி தோழி.
சங்கர சங்கர சம்பு."

என்றருளிச்செய்தார்கள்.

"மைப்படிந்த கண்ணாளுந் தானுங் கச்சி
மயானத்தான் வார்சடையா னென்னி னல்லா
னொப்புடைய னல்ல னொருவ னல்ல
னொரூரா னல்லனோ ருவம னில்லி

யப்படியு மந்நிறமு மவ்வண்ணமு
மவனருளே கண்ணாகக் காணி னல்லா
லிப்படிய னிந்நிறத்த னிவ்வண்ணத்த
னிவனிறைவ னென்றெழுதிக் காட்டொ ணாதே."

என்று தாண்டகவேந்தர் சாற்றிப்போந்ததும் தக்க சான்றாகும்.

இவ்வாறு சுத்தாத்வைத சித்தாந்த சைவநெறியைக் கடைப்பிடித்து, சரியை கிரியா மார்க்கங்களிலிருந்து தம்மை வழிபடுவோர்க்குச் சிவபெருமான் படர்க்கையாகவும், சிவயோகிகளுக்கு முன்னிலையாகவும், சிவஞானிகளுக்குத் தன்மையாகவும் இருந்து அருள் செய்வதனாலும்; அவரை வழிபடாதவர்க்கு அவர் அவ்வாறிருந்து அருள் செய்தல் இல்லாமையாலும், நாம் 'கடவுள் உண்டு என்பவர்க்கு உண்டு, இல்லை என்பவர்க்கு இல்லை' என்று கூறுவோம்.

திருவாசகம்

வானாகி மண்ணாகி..................யென் சொல்லி வாழ்த்துவனே.

திருச்சிற்றம்பலம். சுபம்.

---

## சைவமக்களின் கடமை

[சிதம்பரம் சாஹித்யசிரோமணி ஸ்ரீ க. சிவகடாக்ஷக்குருக்கள்.]

சைவபெருமக்களாகிய நாம் நமது சமய வளர்ச்சி கருதி இந்நாளில் செய்யவேண்டிய வேலைகள் பலவுள. அவ்வேலைகளை நிறைவேற்றுதற்கு முன்வந்து பணிசெய்து பயன் விளைத்தற்குரிய பலரிலர். ஆயினும், இஞ்ஞான்று அத்தி பூத்ததுபோல ஆங்காங்கு ஒருசில மெய்யன்பர்கள் சமயப்பிரசாரஞ் செய்துவருகின்றார்கள். இன்னும் தங்கள் கருத்தைப் பணி செய்தலிற் பதிக்கவில்லை.

சைவமஹாசபை பலவற்றில் சைவப் பெருமை பேசப்படுகின்றனவே ஒழியச் சைவப்பணி நன்கு வலுவுறுத்திப் பேசப்படவில்லை. சொற்பொழிவாளர்களும் கேட்டின்புறுவோரும் சொல்நயம், பொருள்நயம் இவைகளையே நாடுகின்றனரன்றி வேலை நலத்தை நாடுகின்றாரில்லை.

இவ்வாறு சமயச்சபைகள் பலவற்றில் ஆண்டுக்கொரு முறை இன்பவிழாவெடுத்து மகிழ்வதோடு அமைந்துவிடுகின்றனர். பின்னர் அயர்ந்து உறங்க ஆரம்பித்து, அடுத்த ஆண்டுத் தொடக்கத்தில்தான் ஆண்டு விழாக் கொண்டாடுவதற்காகக் கண்விழிக்கின்றனர். ஆனல், பயனற்ற அறிக்கைகளைமட்டும் அழகாகத் தயாரித்து அச்சிட்டுப் பரப்புகின்றனர். முதற்கண் இக்குறைகளை ஒழித்தற்கு முயலவேண்டும்.

ஒரு திருக்கூட்டத்திற்கு ஐந்து, ஆறு தொண்டர்கள் இருந்தாலும் போதும். இத் திருக்கூட்டத்திற்கு மிக அதிகமான செல்வத்தையும் தேடவேண்டுவதில்லை. திருத்தொண்டர்கள் மட்டும் தந்நலம் கருதாது பொதுநலம் நாடுபவராகவும், இலவசப்பணி செய்பவராகவும் இருத்தல் வேண்டும். ஆனல், அன்னர் நாடோறும் இவ்வேலையையே செய்யவேண்டுவதில்லை. ஒருமாதத்தில் சிலநாட்கள் மட்டும் இத்தொண்டில் ஈடுபட்டாற்போதும். முக்கியமாகத் தொண்டரனைவரும் இறைவன் திருவருளைமுன்னிட்டு ஒற்றுமையோடும், நிறைந்த ஊக்கத்தோடும் பணிசெய்து, அன்புநெறியினை வளர்க்கத்தக்க பேருணர்வு உடையவராய் இருத்தல் வேண்டும்.

அன்னர் உடம்பிலுள்ள இரத்தநாளங்கள் அனைத்திலும் சைவத்தேன் கலந்த இரத்தவெள்ளம் கொதிப்புற்றோடி இருத்தல்வேண்டும். எல்லோரும் பெரும் பண்டிதர்களாக இருக்கவேண்டுமென்பதில்லை. பிரசாரவேலைக்குப் போதிய அளவு பிழையறச் சைவசித்தாந்த நூற்பொருள்களை அறிந்து கொண்டவர்களாக இருந்தாற்போதும்.

நான் என்னும் அகந்தையின்மையும், அடக்கமும் அன்னோர்க்கு ஆபரணமாயிருக்கவேண்டும். தவிர, உறுதி அஞ்சாமை பொறுமை நல்லொழுக்கம் முதலிய நற்குணங்களுக்கு அன்னர் உபமான வஸ்துவாக (எடுத்துக்காட்டாக) இருக்கவேண்டும். இளைஞர்கள் எப்பொழுதும் நான்வருகிறேன் நான்வருகிறேனென்று திருக்கூட்டங்களில் சேர்ந்து தொண்டுபுரிய முன்வர வேண்டும். இம்மாதிரியாகவே செய்யவேண்டிய கடமைகள் அநேகம் உள. அவைகளை ஆயிரம் நாவைப் படைத்த ஆதிசேஷனலும் சொல்லச் சாத்தியமிரா.

பொதுவாக எம்மதத்தினராயிருந்தாலும் அவரவர்கள் கடமைகளை அறிந்து கொள்வதற்கு மிகவும் இன்றியமையாத சாதனம் முக்கியமாக கல்வியொன்றேயாகும். அதிலும் நமது சமயத்துக்குகந்த புத்தகங்களைப் படிப்பதுதான் முதற் கடமையாகும். அவைகளில் மிகச்சிறந்தது ஸ்ரீலஸ்ரீ ஆறுமுகநாவலர் அவர்களால் இயற்றப்பட்ட புத்தகங்களாகும். மேலும் நமது பத்திராதிபர் ஸிவஸ்ரீ ச. குமாரசாமிக்குருக்க

ளையா அவர்களாலும் இயற்றப்பட்ட சிவபூசாவிளக்கம் முதலிய புத்தகங்கள் பலவுள. அவைகளிலுள்ள விஷயங்களை அறிந்து நடப்பதும் நமது முதற்கடமையென்றே கூறுவேன். பொதுவாக மாணவர்களுக்கு சிறந்த நூல்களை குறிப்பிட்டு ஆண்டிற்கொருமுறை சமய பரீக்ஷைவைத்து அதில் தேறுபவர்களுக்கு பரிசுகளும் யோக்கியதாபத்திரங்களும் வழங்குதல் வேண்டும்.

இனி, வேதாகம பாடசாலைகளெல்லாம் சோற்றுச்சாலைகளாக நடத்தாது, நல்லமுறையில் நடத்தி, அவைகளில் பயிலும் மாணவர்களுக்குப் பரீக்ஷைகள் வைத்துப் பரிசுகள் வழங்குதல் வேண்டும். தவிர, மறந்தும் தம்மக்களைக் கிறிஸ்தவ பாதிரிமார் பாடசாலைக்கு அனுப்புதல் கூடாது. இதனுல் உண்டாகும் நன்மைதீமைகளைக் கண்கூடாகப் பார்த்து அனுபவித்துவருகின்ருேம். ஆகவே, நம்மக்களுக்கு நம்முடைய உபாத்தியாயர்களைக் கொண்டே கல்வி கற்பித்தல் வேண்டும். பெற்ருேர்கள் இதில் சிரத்தை செலுத்துதல்வேண்டும்.

இனி, திருக்கோவில்களிலுள்ள திருவோலக்கா மண்டபங்களில் நமது இன்றமிழ்மொழியால் பக்திச்சுவை ததும்பத் திருவிளையாடற்புராணம், பெரியபுராணம், கந்தபுராணம் முதலியவைகளை வாசிக்கச்செய்தல் வேண்டும். திருக்கோவிலில் அநாவசியமாக ஆடம்பரத்துடன் கூடிய செலவுகளை ஒழித்து அதற்குப் பதிலாகச் சைவப்பெருஞ் சொற்பொழிவுகளை நடாத்திவைத்தல் வேண்டும். இனி, நமது சிவாகமங்களை எல்லாம் திரட்டி அச்சிடுவதோடு அருந்தமிழ் மொழிபெயர்த்தும் நல்ல தாளில் அச்சிடுதல் வேண்டும். இப்பணியில் தேவகோட்டை சிவாகம சங்கத்தாரும், திருநெல்வேலி தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தாரும் செய்துவருவது மெச்சத்தகுந்ததாகும்.

உண்மைச் சைவசமயவளர்ச்சி கருதி உழைக்கும் பத்திரிகைகளையும் சைவர்களாய்ப் பிறந்த நாமனைவரும் ஆதரித்தல்வேண்டும். இதுவும் நமது முதற்கடமையாகும். இக் கடமையில் ஈடுபட்டிருக்கும் நமது ஆதிசைவப் பெரியாராகிய யாழ்ப்பாணம் அச்சுவேலி ஸ்ரீ ச. குமாரசாமிக்குருக்களையா அவர்களை மிகவும் பாராட்டுவோமாக.

இத் தொண்டையே மிகவும் மேன்மையாகச் செய்வதற்கரிய சாதனங்களைச் செய்வது நமது கடமைகளிலும் முதற்கடமையாகும். மேலும், பல நோய்களால் வருந்தும் ஒருவனுக்கு எல்லா நோய்களும் தீருமாறு மருந்து கொடுத்தாலொழிய ஒன்றினை மட்டும் தீர்க்கத்தக்க மருந்தைக் கொடுப்பதிற் பயனில்லை. ஒன்று தீர்ந்தாலும் மற்ருென்று தன்புறுத்தும்.

எனவே, நமது சைவவளர்ச்சிக்குரிய எல்லாச் சீர்திருத்தங்களையும் நாம் செய்தே தீருதல்வேண்டும். நமது சைவப்பயிர் பரிபாலிப்பாரின்றி இப்பொழுது பலவகையாலும் தளர்வுற்று வாடி நிற்கின்றது. பல்வகைக் களைகளும் அதனைப் பெரிதும் துன்புறுத்துகின்றன. ஒருபக்கம் கிறிஸ்தவமதம் அதைச் சூழ்ந்துகொண்டு காடாக வளர்ந்துவருகின்றது. ஒருபக்கம் எம் மதமும் சம்மதம் என்னும் பொதுக்கொள்கைகள் அதனைப் பறக்கச்செய்கின்றன. நமது மக்களிற் பலர் சமயஞானமின்மையால் உண்மைப் பொருள் யாது என்பதை உணராது வீண்பொழுது போக்குகின்றனர். படித்தவர்களிலும் பிரபுக்களிலும் பெரும்பாலோர் அயர்ந்து உறங்குகின்றார்கள். திருமடங்களெல்லாம் வெறுமடங்களாகி வருகின்றன. சைவநூற்பயிற்சியும் பெரிதும் அருகித் (தீர்ந்து) வருகின்றது.

அன்பர்களே! இதுவோ நாம் அயர்ந்து உறங்குவதற்குரிய காலம்? எழுமின்! எழுமின்! விழிமின்! அறிமின்! சைவப்பயிரைப் பரிபாலியுங்கள். பரந்த நோக்கத்தோடு சண்டைசச்சரவு இன்றி விரிந்த நமது சமயக்கொள்கைகளை யாண்டும் செய்கையில் பரப்புங்கள். வீண் பெருமை பேசுவதில் பயனில்லை. பேச்சுக் காலம் பறந்துவிட்டது. செய்கைக் காலம் பிறந்திருக்கின்றது. எனவே, எல்லோரும் செய்கை, செய்கை என்று சிந்தனைசெய்துகொண்டு சைவநெறியை வளருங்கள் வளருங்கள்!!

---

ஃஸ்வூாகஂ ஶைவஶாஸ்த்ரபரிபாலந பத்ரிகாயாஂ

ஸஂஸயொயஂ ப்ரகடநீயஃ ॥

ஸஂஸ்தீதிஃ ॥

யெ வதந்தெ க்ருஶஜ்ஞாஃ யெஷாஂ ச நிகடெ வதந்தெ க்ருஶாஃ தாந், ஸஶயாவாயஸ்வாஶிஷ சந்த்ரஶய ஶணிவாவக ஸ்வாஶிநெ வ்யஷஹ வாஹந ஶஹொஸ்த்ஸவஂ கதஂ வதநெதவா க்ருஶப்ராஶாண்யஂ உத ந ஜநெத்யநஂ விஶயஂ நிவதயிதஂ ஸவிநயஂ ஸாஂஜலிபஶஂ ப்ராயயெ ॥ ஜஶஂ ஃஸஜ்ஜாரஶோ ந்ராஶவாஸி ॥

---

திருவாவடுதுறையில்
அம்பலவாணதேசிகர் செந்தமிழ்க் கல்விச்சாலைத்

# திறப்புவிழா வைபவம்

விக்கிரமஹூ பங்குனிமீ 20உ (2-4-41) புதன் கிழமை மாலை 6 மணிக்கு இவ்விழா ஆதீன மடாலயத்தில் சிறப்பாக நடைபெற்றது. கல்விச்சாலையின் திறப்பாளராகிய மாயவரம் டிப்டி கலெக்டர் ஸ்ரீமான் ஆவுடையப்பபிள்ளையவர்களை ஊர்வலமாய் அழைத்துவந்து பலவித உபசாரங்கள் செய்தனர். மடத்திலுள்ள கொலுமண்டபத்தில் சபை ஒன்று கூட்டப்பட்டிருந்தது. அங்குப் பல தமிழறிஞர்களும், சமயாபிமானிகளும் கூடியிருந்தனர். அம்பாசமுத்திரம் ஓதுவாமூர்த்திகளால் தமிழ்மறை ஓதப்பட்டதும் ஆவுடையார் கோவில் டிரஸ்டி ஸ்தானீகம் ஸ்ரீ நமசிவாயத் தம்பிரான் சுவாமிகள் தலைவரவர்களைப் பிரேரிக்கப் பாளையங்கோட்டை வள்ளல் சிவஞானஐயா வழிமொழிந்தார்கள். அப்பால் தலைவரவர்கட்கு உபசாரப்பத்திரம் படிக்கப்பட்டது. பின்னர் வண்ணார்பேட்டை வக்கீல் ஸ்ரீமான் ஆவுடையப்ப பிள்ளையவர்களும், திருவாரூர்த் திரு. தியாகராஜ ஞானியார் அவர்களும், மஹாசந்நிதானத்தின் திருவுருவப் படத் திறப்பாளர் கும்பகோணம் ஸ்ரீமான் குமாரசுவாமிச் செட்டியாரவர்களும் கல்விச்சாலையின் அவசியத்தைப்பற்றியும், இதனை ஏற்படுத்திய மஹாசந்நிதானத்தின் பெருங்கருணையைப்பற்றியும் விரிவாய்ப் பேசினார்கள். பின்னர் தலைவரவர்கள், தாம் மஹாசந்நிதானத்தை முதன்முதல் தரிசித்தபொழுதே இவ்வாறு ஸ்தாபனம் ஏற்படுத்தப்படல் வேண்டும் என்று கேட்டுக்கொண்டதாயும், மஹாசந்நிதானம் ஓர் பெருங்கருணை கொண்டு அதை ஏற்படுத்தியிருப்பதாயும் கூறினார்கள். பின் தலைவரவர்கள் கல்விச்சாலையையும், ஸ்ரீமான் குமாரசுவாமிச் செட்டியாரவர்கள் மஹாசந்நிதானத்தின் திருவுருவப்படத்தையும் திறந்துவைத்தார்கள். தருமபுர ஆதீனத்திலிருந்தும், திருப்பனந்தாள் மடத்திலிருந்தும் பிரதிநிதிகள் வந்திருந்து இவ்வைபவத்தைச் சிறப்பித்தார்கள். இவ்வைபவத்திற்கு வர இயலாத பெரியோர்கள் அனுப்பிய தந்திகளும், கடிதங்களும் வாசிக்கப்பட்டன. ஆரம்பமுதல் திருவாவடுதுறை ஸ்ரீ ராஜரத்தினம் கோஷ்டியாரின் நாதஸ்வரக்கச்சேரி நடந்தது. பின் வந்தனோபசாரத்துடன் கூட்டம் முடிவடைந்தது.